[7th May 1962

SRI R. S. VEERAPPA CHETTIAR: இதன் விஷயமாக மாகாண ரிஜிஸ்டிரார் அவர்கள் என்ன அபிப்பிராயம் கொடுத்திருக்கிறார்கள்.

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR: நான் முதலிலே சொல்லியபடி, இம்மாதிரி பிரிப்பதிலே அவர்களுக்கு எந்த விதமான ஆட்சேபனையும் இல்லை.

*Divisional Panchayat Officers*

* 45 Q.—SRI R. S. VEERAPPA CHETTIAR: Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there is any proposal to appoint additional Divisional Panchayat Officers in the divisions where the work is very heavy; and

(b) if so, how these officers will be recruited?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Yes, Sir.

(b) Will arise only when a final decision is taken on the proposal referred to at (a) above.

SRI R. S. VEERAPPA CHETTIAR: எந்தெந்த டிவிஷன்களுக்கு அடிஷனல் டிவிஷனல் பஞ்சாயத்து ஆபீஸர்கள் நியமிக்கப்படும் என்பதை அறியலாமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்பொழுது ஒவ்வொரு ரெவின்யூ டிவிஷனுக்கும் ஒரு பஞ்சாயத்து ஆபீஸர் இருக்கிறார். சில டிவிஷன்கள் ரொம்ப பெரியதாக இருப்பதால், அங்கெல்லாம் ஒரு அடிஷனல் பஞ்சாயத்து ஆபீஸர் போடவேண்டும் என்று உத்தேசம். எங்கெங்கே அடிஷனல் பஞ்சாயத்து ஆபீஸர் போடவேண்டுமென்பது பரிசீலனையில் இருக்கிறது, இன்னும் முடிவு எடுக்கப்படவில்லை.

SRI C. CHIRANJEEVULU NAIDU: Are the Government satisfied above the functioning of Local Administration Department and is this system working satisfactorily?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Yes, Sir. Government are quite will satisfied about the working of this system.

SRI K. R. SAMBANDAM: இப்பொழுது ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் ஒரு பஞ்சாயத்து ஆபீஸர் இருக்கிறார். இம்மாதிரி ஒவ்வொரு டிவிஷனுக்கும் ஒரு பஞ்சாயத்து ஆபீஸர் இருக்கிறார். இவர்கள் எல்லோரையும் 'கோ-ஆர்டினேஷன்' பண்ணி இருவரும் சேர்ந்து வேலை செய்யும்படியான ஒரு நிலைமையை ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பஞ்சாயத்து யூனியனில் இருக்கிற ஆபீசர் எக்ஸ்டென்ஷன் ஆபீசர். ரெவின்யூ டிவிஷனில் பஞ்சாயத்து ஆபீசர் இன்னொருவர். இவர்களிடையே கோ-ஆர்டினேஷன் இப்பொழுதே இருக்கிறது.

SRI R. S. VEERAPPA CHETTIAR: அடிஷனல் பஞ்சாயத்து ஆபீசர் நியமனம் செய்வதிலே எந்தத் துறையிலே உள்ள உத்தியோகஸ்தர்கள் நியமனம் செய்யப்படும் என்பதை அறியலாமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பஞ்சாயத்து ஆபீசர் இப்பொழுது தாசில்தார்களிலிருந்து எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள். அடிஷனல் பஞ்சாயத்து ஆபீசர் டெப்யூடி தாசில்தார்களிலிருந்து எடுத்துக் கொள்ளலாமா என்பது அரசாங்கத்தின் யோசனையில் இருக்கிறது.